உ
ஸ்ரீ கோமத்யை நம:

# ஸ்ரீ கோமதி அம்பாள் அஷ்டகம்

தமிழ் உரை:
ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக
**பி. என். நாராயண சாஸ்திரிகள்**

சிவஞான பூஜா மலர் துந்துபி ஆண்டு - (1982)
பிரசுரம்: **ஆங்கீரஸ s. வேங்கடேச சர்மா**, மேலமாம்பலம், சென்னை - 600 033]

**பூனகலாஸே மனோக்ஞே புவன வனவ்ருதே**
**நாகதீர்த்தோபகண்டே**
**ரத்னப்ராகார மத்யே ரவிசந்த்ர மஹாயோக**
**பீடே நிஷண்ணம் ।**
**ஸம்ஸார வ்யாதி வைத்யம் ஸகலஜனநுதம்**
**சங்கபத்மார்ச்சிதாங்க்ரிம்**
**கோமத்யம்பாஸமேதம் ஹரிஹரவபுஷம்**
**சங்கரேசம் நமாமி ॥**

பூசைலாசமெனப்படும் சங்கரநாராணர் கோவிலில் உலகமாகிற காட்டினால் சூழப்பெற்றதும், நாகதீர்த்த மெனப்படும் குளத்தின் அருகிலுள்ளதும், ரத்தினங்களாலான பிராகாரத்தின் நடுவில் உள்ளதுமான சூரிய, சந்திரராகிற யோகபீடத்தில் வீற்றிருப்பவரும், சங்கு, தாமரை முதலிய ரேகைகளைத் திருவடியில் கொண்டவரும், பிறப் பிறப்பு என்கிற நோய்க்கு வைத்தியராயும், கோமதி அம்பாளுடன் கூடியவரும், முக்கண்ணன், திருமால் இரண்டையும் ஒரே உருவத்தில் கொண்டவருமான ஸ்ரீ சங்கரேச்வரரான ஸ்ரீசங்கரலிங்கரை வணங்குகின்றேன்.

**லக்ஷ்மீ வாணீ நிஷேவிதாம்புஜ பதாம்**
**லாவண்ய சோபாம் சிவாம்**
**லக்ஷ்மீவல்லப பத்மஸம்பவநுதாம்**
**லம்போதரோல்லாஸிநீம் ।**
**நித்யம் கௌசிகவந்த்யமான சரணாம்**
**ஹ்ரீங்கார மந்த்ரோஜ்வலாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** 1

லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலியவர்களால் நன்கு தொழப்பட்ட திருவடித் தாமரைகளை உடையவளும், திருமால், நான்முகன் ஆகியோர்களால் துதிக்கப்பட்டவரும், தினமும் கௌசிகரால் வணங்கப்பட்ட திருவடிகளை உடையவளும், "ஹ்ரீம்" என்னும் மந்திரத்தில் ஒளிவிட்டு விளங்குபவளும், புன்னாகவனத்தின் தலைவரின் மனைவியாய் விளங்குகிற ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**தேவீம் தானவராஜ தர்ப்பஹரிணீம்**
**தேவேந்த்ர ஸம்பத்ப்ரதாம்**
**கந்தர்வோரக யக்ஷ ஸேவிதபதாம்**
**ஸ்ரீசைல மத்யஸ்திதாம் ।**
**ஜாதீ சம்பக மல்லிகாதி குஸுமை**
**ஸம்சோபிதாங்க்ரி த்வயாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** 2

பண்டன் முதலான அரக்கர் தலைவர்களின் கொழுப்பை அடக்கியவளும், மூவுலகத்துத் தலைவனான இந்திரனுக்கு ஒப்பான செல்வத்தைக் கொடுப்பவளும், கந்தர்வர், யக்ஷர், உரகர் முதலியவர்களால் தொழப்பட்ட திருவடிகளை உடையவளும், ஜாதி, சம்பகம், மல்லிகை ஆகிய மலர்களால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவளும், புன்னாகவனத்தின் தலைவரின் மனைவியும் தேவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**உத்யத்கோடி விகர்த்தனத்யுதிநிபாம்**
**மௌர்வீம் பவாம்போநிதே:**
**உத்யத்தாரகநாத துல்யவதநாம்**
**உத்யோதயந்தீம் ஜகத் ।**
**ஹஸ்தந்யஸ்த சுகப்ரணாள ஸஹிதாம்**
**ஹர்ஷப்ரதாமம்பிகாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** 3

உதயமாகிற கோடிக்கணக்கான சூரியர்களுக்கொப்பான ஒளியை உடையவளும், பிறவிக்கடலைத் தகர்த்தெறிபவளும், உதயமாய்க் கொண்டிருக்கின்ற நக்ஷத்திரக்கூட்டங்களின் தலைவனான சந்திரன் போன்ற முகத்தை உடையவளும், உலகத்தை விளங்கச் செய்பவளும், கிளியையும், தாமரைப் பூவையும் கையில் கொண்டு பக்தர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிற புன்னாகவனத் தலைவரின் மனைவியான ஸ்ரீ கோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**கல்யாணீம் கமநீயமூர்த்திஸஹிதாம்**
**கர்ப்பூர தீபோஜ்வலாம்**
**கர்ணாந்தாயத லோசனாம் களரவாம்**
**காமேச்வரீம் சங்கரீம் ।**
**கஸ்தூரீ திலகோஜ்வலாம் ஸகருணாம்**
**கைவல்ய ஸௌக்யப்ரதாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** **4**

கல்யாணியாயும் மிகவும் அழகான திருமேனியைக் கொண்டவளும், கர்ப்பூர தீபங்களால் பிரகாசிக்கிறவளும் காது வரையில் நீண்ட கண்களை உடையவளும், இனிமையான குரலையுடையவளும், காமேச்வரியாயும், சங்கரியாயும், கஸ்தூரிப்பொட்டால் விளங்குகிறவளும், கருணையுடன் கூடியவளும் மோக்ஷம் என்னும் அழியாத ஸௌக்கியத்தைக் கொடுப்பவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**வைடூர்யாதி ஸமஸ்த ரத்னகசிதே**
**கல்யாண ஸிம்ஹாஸனே**
**ஸ்தித்வா (அ)சேஷஜனஸ்ய பாலனகரீம்**
**ஸ்ரீராஜ ராஜேச்வரீம் ।**
**பக்தாபீஷ்ட பலப்ரதாம் பயஹராம்**
**பண்டஸ்ய யுத்தோத்ஸுகாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** **5**

வைடூர்யம் முதலிய எல்லா ரத்தினங்களாலும் அமைக்கப்பட்ட ஸிம்மாஸனத்தில் அமர்ந்து உலக ஜனங்களைப் காப்பவளும், ராஜ ராஜர்களுக்குத் தலைவியாயும், பக்தர்களின் இஷ்டத்தைக் கொடுப்பவளும், பயத்தைப் போக்கடித்து பண்டன் என்னும் அரக்கனோடு போர்புரிவதில் ஆர்வமுள்ளவரும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**சைலாதீசஸுதாம் ஸரோஜநயனாம்**
**ஸர்வாகவித்வம்ஸிநீம்**
**ஸந்மார்க்கஸ்தித கோகரக்ஷணபராம்**
**ஸர்வேச்வரீம் சாம்பவீம் ।**
**நித்யம் நாரத தும்புரு ப்ரப்ருதிபி:**
**வீணாவிநோதஸ்திதாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** **6**

மலையரசனின் மகளும், தாமரை போன்ற கண்களை உடையவளும், பாவக்கூட்டத்தை நாசம் செய்பவளும், நல்வழியில் உள்ள ஜனங்களைக் காப்பவளும் ஸர்வேச்வரியும், சம்புவின் மனைவியாயும், நாரதர், தும்புரு முதலிய தேவ முனிவர்களுடன், வீணை நாதம் செய்பவளும் புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**பாபாரண்ய தவாநலாம் ப்ரபஜதாம்**
**பாக்யப்ரதாம் பக்திதாம்**
**பக்தாபத்குலசைல பேதநபவிம்**
**ப்ரத்யக்ஷமூர்த்திம் பராம் ।**
**மார்க்கண்டேய பராசராதி முநிபி:**
**ஸம்ஸ்தூயமாநாம் உமாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** 7

தன்னை அண்டினவர்களின் பாவமாகிற காட்டிற்குத் தீயாயும், பாக்கியத்தையும் பக்தியையும் ஒருங்கே கொடுப்பவளும், பக்தர்களின் மலைபோன்ற ஆபத்துக்கு வஜ்ராயுதம் போன்றவளும், நேரில் காக்ஷி கொடுப்பவளும், மார்க்கண்டேயர், பராசரர் முதலிய முனிவர்களால் நன்கு துதிக்கப்படுபவளும், உமாதேவியும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**சேதாரண்யநிவாஸிநீம் ப்ரதிதினம்**
**ஸ்தோத்ரேண பூர்ணாநநாம்**
**த்வத்பாதாம்புஜ ஸக்தபூர்ண மனஸாம்**
**ஸ்தோகேதரேஷ்ட ப்ரதாம் ।**
**நாநாவாத்யவைபவ சோபிதபதாம்**
**நாராயணஸ்யாநுஜாம்**
**ஸ்ரீபுன்னாகவனேச்வரஸ்ய மஹிஷீம்**
**த்யாயேத் ஸதா கோமதீம் ॥** 8

மனதாகிற காட்டில் வஸிப்பவளும், தினமும் பக்தர்களின் துதியினால் மலர்ந்த முகமுடையவளும், தந்திருவடித்தாமரைகளில் எப்பொழுதும் மனதைச் செலுத்திய பக்தர்களுக்கு அளவற்ற வரங்களைக் கொடுப்பவளும், பலவிதமான வாத்தியங்களினால் விளங்குகிற திருவடிகளை உடையவளும், நாராயணனின் உடன் பிறந்தவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

ஸ்ரீ ஆதி சங்கரர் இயற்றியதாகக் கருதப்படுகிற ஸ்ரீ கோமதி அஷ்டகம் ஸ்ரீ பி. என். நாராயண சாஸ்திரிகள் எழுதிய தமிழுரையுடன் முற்றிற்று.

சிவம்.